12th August 1960]

### *Steel Plant*

* 139 *Q.*—SRI N. K. PALANISAMI
SRI N. R. THIAGARAJAN
SRI A. A. RASHEED
SRI V. K. KOTHANDARAMAN
SRI P. G. MANICKAM
SRI S. M. ANNAMALAI
SRI T. SAMPATH
SRI P. S. CHINNADURAI } Will the

Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether the East German Experts have submitted their report after their investigation of the iron ore area and the Neyveli Project;

(*b*) if so, their main recommendations;

(*c*) whether Salem minerals can be commercially tapped; and

(*d*) whether the East German Experts have recommended the starting of a steel rolling mill in this State?

THE HON. SRI R. VENKATARAMAN: (*a*) *to* (*d*) The East German Experts have submitted their preliminary report on the establishment of a Steel plant in this State. Consultants' reports are invariably treated as confidential. The contents of the Report of the East German Experts cannot therefore be divulged at this stage.

**SRI N. K. PALANISAMI:** *கனம் நிதி அமைச்சர் அவர்கள் நேற்றைய தினம் கொடுத்த ஸ்டேட்மெண்டில் ஸ்டீல் ப்ளாண்டை இங்கே ஏற்படுத்துவதற்கு நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டிருப்பதாகச் சொன்னார்கள். இதற்காகப் பூர்வாங்க ஏற்பாடுகள் செய்யச் சொல்லி சென்னை சர்க்காரை மத்திய சர்க்கார் கேட்டுக் கொண்டிருப்பதாகச் சொன்னார்கள். அப்படியானால் இதற்கான ஆரம்ப வேலைகள் என்னென்ன எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன?*

**THE HON. SRI R. VENKATARAMAN:** *மத்திய சர்க்கார் கேட்டுக் கொண்டது என்று நிதி அமைச்சர் சொன்னதாகச் சொல்வதை நான் ஒப்புக்கொள்ளவில்லை. ஆனால் இன்றைக்கு இருக்கும் நிலைமையில் அது வெறும் ஸ்கீம் மாத்திரமல்ல. மேற்கொண்டு நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளலாம் என்ற நிலைமை ஏற்பட்டிருக்கிறது. ராஜ்ய சர்க்கார் அதற்கு வேண்டிய ஆரம்ப நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளப் போகிறார்கள். எந்த நிலத்தில், எவ்வளவு பரப்பில், என்றெல்லாம் சொல்வது சட்ட சபைக்குத் தேவையில்லையென்று நினைக்கிறேன்.*

[12th August 1960

SRI A. A. RASHEED : May I know when exactly this experiment will be completed and production started? Will the Government entrust this experiment to the experts of other nationalities also instead of depending upon East German Experts alone.

THE HON. SRI R. VENKATARAMAN : There are three stages in any industrial project of this magnitude. First is the laboratory experiment. Second is the pilot project stage and the third is the initiation of the scheme itself. We have completed all the laboratory experiments required in the first place. The pilot project has got to be established and steps are being taken for that. The East Germans have asked us to ship 1,000 tons of lignite for the purpose of carrying out research for designing the machinery. It is not as if one machine could be designed for all the iron and steel plants in the world. A separate machinery has to be designed for separating different kinds of ore, melting process and so on. So it is proposed to send 1,000 tons of lignite in the course of the year or a little later.

As regards the question why East German Experts alone are consulted and not others, I have told the House a number of times that East Germany is the only country in the world which has utilized low grade ore of less than 30 per cent FE content by using lignite. So we would go only to that country which has demonstrated the possibility of the scheme rather than follow people who may have only some ideas about it.

SRI S. M. ANNAMALAI : இதற்கு முன்னால் நிலக்கரியை உபயோகித்து இரும்புத் தொழிற்சாலையை ஆரம்பிக்க திட்டம் இருந்தது. இப்போது மின்சாரத்தைக் கொண்டு அதை நடத்தலாம் என்று நேற்று அமைச்சர் அவர்கள் பதில் சொல்லும் போது சொன்னார்கள். இந்தக் காரணத்தையொட்டி சேலத்தில் ஆரம்பிக்க இருக்கும் தொழிற்சாலையை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்க முயற்சி எடுத்துக் கொள்ளப்படுமா?

THE HON. SRI R. VENKATARAMAN : எலக்ட்ரிசிடியை உபயோகப்படுத்தி நடத்துவதாலும், பழுப்பு நிலக்கரியை உபயோகப்படுத்தி நடத்துவதாலும் உடனடியாக அதற்கான நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்படும் என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

SRI P. G. MANICKAM: கிழக்கு ஜெர்மனி நிபுணர்களால் சமர்ப்பிக்கப்பட்டுள்ள அறிக்கையில் எந்த இடத்தில் இரும்புக் கனித் தொழிற்சாலையை ஆரம்பிப்பது என்று சொல்லியிருக்கிறார்கள் ?

THE HON. SRI R. VENKATARAMAN : அவர்கள் அதை இன்னும் கூறவில்லை.

SRI V. K. KOTHANDARAMAN : இரும்புக் கனித் தொழிற்சாலையை ஆரம்பிக்கும் நேரத்தில் சேலம் ஜில்லாவில் கிடைக்கக்

12th August 1960]

கூடிய இரும்பை மட்டுந்தான் உபயோகிக்கப் போகிறார்களா அல்லது மற்ற ஜில்லாக்களில் கிடைக்கக்கூடிய இரும்பையும் தோண்டி உபயோகிக்கத் திட்டம் இருக்கிறதா?

**THE HON. SRI R. VENKATARAMAN :** எனக்கு ஒன்றும் ஜில்லா "பேட்ரியாடிஸம்" கிடையாது. தமிழ் நாட்டில் எங்கு கிடைத்தாலும் உபயோகப்படுத்தக் கூடும்.

**SRI K. ANBAZHAGAN :** சேலம் இரும்பு உருக்குத் திட்டத்தில் இரும்பு உருக்கு என்ற அடிப்படையைத் தொழிற்சாலை மட்டுந்தான் உடனடியாக ஏற்படுத்த வாய்ப்பு இருக்கிறதா? ஸ்டீல் ரோலிங் போன்ற முதல்தரமான இரும்பை உற்பத்தி செய்ய வாய்ப்பு இருக்கிறதா? நேற்றைய தினம் கனம் நிதி அமைச்சர் அவர்கள் அறிவித்த கருத்திலிருந்து மாறுபடுவதாகத் தொழில் அமைச்சர் அவர்கள் கூறினார்கள். எந்த வகையில் அவர்கள் மாறுபடுகிறார்கள் என்பதை அறிவிப்பார்களா?

**THE HON. SRI R. VENKATARAMAN :** மாறுபடுகிறேன் என்று சொல்லவில்லை. பேசுவதைச் சரியாகப் புரிந்து கொள்ளாததால் இந்த மாதிரித் தவறுகள் ஏற்படுகின்றன. கனம் பழனிசாமி அவர்கள், "மத்திய சர்க்கார் உத்தரவு கொடுத்துவிட்டது" என்று கனம் நிதியமைச்சர் அவர்கள் சொன்னதாகச் சொன்னார்கள். அதைத்தான் நான் ஒப்புக்கொள்ளவில்லை. நாங்கள்தான் இதற்காக நிபுணர்களைக் கொண்டு ஆரம்ப கால நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டு வருகிறோம். மத்திய சர்க்கார் உத்தரவு கொடுத்துவிட்டது என்று கனம் நிதி அமைச்சர் பேசியதாக ஞாபகம் இல்லை. சட்ட சபை ரெக்கார்டில் அவ்வாறு இருக்க வேண்டாம் என்றுதான் நான் அவ்வாறு சொன்னேன். அடுத்த படியாக, இரும்பு, ஸ்டீல், அலாய் ஸ்டீல் உற்பத்தி செய்ய வேண்டியதெல்லாம் பின்னால் நிர்ணயம் செய்யவேண்டிய விஷயம். எவ்வளவு துரிதமாகக் காரியமாற்றினாலும், இதில் எல்லா நிபுணர்களையும் உபயோகப்படுத்தினாலும்கூட, "பிக் அயர்ன்" வருவதற்கே நான்கு வருஷங்கள் பிடிக்கும். அதற்குப் பிறகு "ஸ்பன் பைப்". பின்னர் ஸ்டீல் உருக்காக மாற்றிக் கொள்ளலாம். அலாய் ஸ்டீல் செய்வதற்குப் பின்னால் திட்டம் போடவேண்டும்.

**SRI K. ANBAZHAGAN :** இந்தத் திட்டத்தைப் பொறுத்து மத்திய சர்க்கார், மேற்கு ஜெர்மனி நிபுணர்கள் கொடுத்த கருத்தைப் பரிசீலனை செய்வதாகத் தெரிவித்தார்கள். அப்படிப் பரிசீலனை செய்து அதன் முடிவு தெரிவிக்கப்பட்டதா? அந்த முடிவைப்பற்றி நமக்குத் தகவல் கிடைத்ததா?

**THE HON. SRI R. VENKATARAMAN :** உலக நிபுணர்களிடையே ஒருவருக்கு ஒருவர், போட்டி இருக்கிறது. ஒருவருக்கு ஒருவர் போட்டி இருப்பதில் தவறு இல்லை. அந்தப் போட்டியின் காரணமாக நமக்கு லாபம் கிடைக்கும் என்றுதான் தோன்றுகிறது. ஏனென்றால் எல்லோருமே பரிசீலனை செய்யவேண்டும் என்று சொல்லுகிறார்கள். அதனால் நமக்கு லாபம்தான்.